(c) the number of students who got such financial aid in each year (1954–58)?

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) No, Sir.

(b) & (c) Do not arise.

*Leprosy Hospitals*

*664 Q.—SRI P. G. MANICKAM: கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) குஷ்ட நோய்க்குச் சிகிச்சை செய்வதற்கான ஆஸ்பத்திரிகள் அரசாங்கத்தாராலும், தனிப்பட்டவர்களாலும் எந்தெந்த இடங்களிலே நடத்தப்பட்டு வருகின்றன ?

(ஆ) கவர்மெண்டால் நிர்வகிக்கப்படும் குஷ்ட நோய் ஆஸ்பத்திரிகளுக்கு 1957–58-ல் செலவு செய்யப்பட்ட தொகை எவ்வளவு ?

(இ) தனிப்பட்டவர்களால் நிர்வகிக்கப்படும் ஒவ்வொரு குஷ்டநோய் ஆஸ்பத்திரிக்கும் மான்யமாகக் கொடுக்கப்பட்ட தொகை எவ்வளவு ?

THE HON. SRI M. A. MANICKAVELU: (a) to (c) A statement [a] is placed on the table of the House.

SRI P. G. MANICKAM: ஸார், இந்த குஷ்டநோயினால் நம் சென்னை மாகாணத்தில் பாதிக்கப்பட்டவர்கள் எவ்வளவு, அதில் குறிப்பாகக் குழந்தைகள் எவ்வளவு என்ற புள்ளி விவரங்களை அரசாங்கத்தின் மூலம் தயாரிப்பது பற்றி கவனிக்கப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: இந்தக் கேள்வி எந்த இடங்களில் நடத்தப்பட்டு வருகின்றன, செலவு எவ்வளவு, மான்யமாகக் கொடுக்கப்பட்டது எவ்வளவு என்பதைப் பற்றியது. புள்ளி விவரங்கள் வேண்டுமானால் தனிக் கேள்வி போட வேண்டும்.

SRI S. M. ANNAMALAI: ஸார், இந்த ஸ்டேட்மெண்டிலே ரூ. 15,000 கட்டிடங்களைக் கட்டுவதற்காக மத்திய சர்க்காருடைய மானியமாகக் கிடைத்திருக்கிறது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. நடைமுறைச் செலவுக்காக மத்திய சர்க்காரிடமிருந்து ஏதாவது வாங்கப்படுகிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: அரசாங்கம் இந்த குஷ்ட நோய் ஒழிப்புத் திட்டத்திலே, அவர்கள் சில ஆஸ்பத்திரிகளுக்கு நான்-ரெகரிங் கிராண்டும், ரெகரிங் கிராண்டும் கொடுக்கிறார்கள். சில ஆஸ்பத்திரிகளுக்கு ரெக்கரிங் கிராண்ட் மட்டும் கொடுக்கிறார்கள். அதெல்லாம் இன்ஸ்டிடியூஷனைப் பொருத்தது.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN: ஸார், இந்த குஷ்ட நோய் ஆஸ்பத்திரிகள் நகரங்களுக்குச் சமீபத்திலும், கிராமங்களிலும், ஜன சஞ்சாரம் இருக்கக் கூடிய இடத்தில் இருப்பதால், மற்ற ஜனங்களுக்கும் பரவுகிறது என்று இருப்பதால், ஜன சஞ்சாரமில்லாத இடங்களில் ஆஸ்பத்திரிகளை அமைக்க சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ? அமைப்பார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: பரவுகிறது என்ற அபிப்பிராயம் இருந்தால் அது தப்பு. இந்த நோய் அவ்வளவு சுலபமாகப் பரவுவதில்லை. தொடர்ந்து நெடு நாளாக இந்த நோய் உள்ளவர்களோடு காண்டேக்ட் இருந்தால்தான் வருகிறது.

SRI P. U. SHANMUGAM: திருவண்ணாமலை போன்ற இடங்களில், வெளியிலே போய் டாக்டர்கள் மருத்துவம் செய்துவிட்டு வருகிறார்கள். அவர்களை இன்பேஷெண்டாக, படுக்கையில் வைத்து சொஸ்தம் செய்ய சர்க்கார் திட்டம் தீட்டியிருக்கிறார்களா ? வெளியிலே போய் ஆங்காங்கு ஊசி போடுவதை விட்டு படுக்கை வசதி செய்து கொடுப்பார்களா ?

---

[a] Printed as Appendix VII on pages 1137–1138 infra.

30th September 1958]

**MR. SPEAKER :** ஆஸ்பத்திரிகள் எங்கு இருக்கின்றன, செலவு எவ்வளவு என்பது கேள்வி. அதை விட்டு வேறு ஏதோ கேட்கிறீர்களே ?...... அடுத்த கேள்வி, 665.

*Cement Distribution*

* 665 Q.—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(a) whether the Union Government have given any suggestion that the control on the supply of cement to the Public should be relaxed; and

(b) whether it has been given effect to?

THE HON. SRI P. KAKKAN : (a) Yes, Sir.

(b) The Government of India proposed the complete abolition immediately of the permit systems for cement distribution to the consumers in this State. The question was examined by Government and it was decided that the cement stockists be permitted to sell 85 per cent of the stocks received by them without Government permits and that the remaining 15 per cent be sold on permits issued by competent authorities.

*Sri Thiagarajaswami Devasthanam Lands, Tiruvarur*

* 666 Q.—SRI M. C. **MUTHUKUMARASWAMY** : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லா, நாகை தாலூகா, திருவாரூர் ஸ்ரீ தியாக ராஜஸ்வாமி தேவஸ்தானத்திற்குச் சொந்தமான

(1) கட்டளை அன்னவாசல்,

(2) மொசகுளம்,

(3) கிடாரங்கொண்டான்,

(4) பள்ளிவாசமங்கலம் அல்லது கேக்கரை,

(5) காட்டூர்,

(6) திருக்கண்ணமங்கை, ஆகிய ஆறு கிராமங்களிலுள்ள ஒவ்வொரு தேவஸ்தானத்திற்கும் நன்செய், புன்செய் எவ்வளவு ?

(ஆ) ஒவ்வொரு தேவஸ்தானங்களின் மேற்பார்வையிலும் சாகுபடி செய்து வரும் மொத்த ஏக்கர் எத்தனை ?

(இ) மேற்படி பண்ணை சாகுபடி ஆரம்பிப்பதற்கு முன்னால், தொடர்ந்த 5 பசலிகளில் ஒவ்வொரு தேவஸ்தானத்திலும் கிடைக்கப் பட்ட மொத்த வருடவாரி வருமானம் என்ன ?

(ஈ) மேற்படி பண்ணை சாகுபடி ஆரம்பித்த பிறகு நாளதுவரையில் பசலிவாரியாக ஒவ்வொரு தேவஸ்தானத்திலும் கிடைக்கப்பட்ட மொத்தத் தொகை எவ்வளவு ?

(உ) மேற்படி கிராமங்களில் கூட்டுறவு விவசாயப் பண்ணை ஆரம்பிக்க அரசாங்கம் எடுத்துக்கொண்ட முயற்சி என்ன ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) to (e) A statement [a] is placed on the table of the House.**

[a] Printed as Appendix VIII on pages 1138–1139 infra.